بِسْمِ اللهِ الرَّحْمَنِ الرَّحِيْمِ

# أَحْكَامُ التَّجْوِيْد

# குர்ஆன் ஓதுவதற்கான சட்டங்கள்

தஜ்வீத் என்றால் : குர்ஆனிலுள்ள ஒவ்வொரு எழுத்துக்களையும் அதன் அதன் வெளியாகும் இடத்திலிருந்து வெளியாக்குதல், நீட்டுதல், குன்னா செய்தல், மெல்லினமாக வல்லினமாக ஓதுதல் இன்னும் இது போன்ற தஜ்வீத் சட்டங்களோடு ஓதுவதற்கு தஜ்வீத் என சொல்லப்படும்.

**அன்புள்ள சகோதர சகோதரிகளே!**
இன்று முஸ்லிம்களில் எத்தனை சத விகிதமானவர்களுக்கு குர்ஆனை ஓதத் தெரியும்? அப்படி ஓதத் தெரிந்தவர்களில் தஜ்வீத் சட்டத்தோடு ஓதத் தெரிந்தவர்கள் எத்தனை பேர் இருக்கின்றனர்? அப்படி ஓதத் தெரிந்தவர்கள் மிகக் குறைவானவர்களே! இக்குறையை நீக்க வேண்டுமென்ற நன்னோக்கத்துடனேயே இச்சிறிய தஜ்வீத் குறிப்பு தொகுக்கப்பட்டிருக்கின்றது. ஆகவே இதைப்படித்து குர்ஆனை உரிய முறையில் ஓதத் தெரிந்து கொள்ளுங்கள்.

## குர்ஆன் ஓதுவதின் சிறப்புகள்

1- நீங்கள் குர்ஆனை ஓதுங்கள் அது நாளை மறுமையில் அதை ஓதியவருக்கு சிபாரிசு செய்யும் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)
2- குர்ஆனையும் அதைக்கொண்டு உலகத்தில் அமல் செய்தவர்களையும் நாளை மறுமையில் கொண்டு வரப்படும். சூரத்துல் பகராவும் சூரத்துல் ஆல இம்ரானும் முன்வந்து குர்ஆனை ஓதியவருக்கு (சுவர்க்கத்தைப் பெற்றுக்கொடுப்பதற்காக) வாதாடும் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)
3- குர்ஆனை ஓதியவருக்காக (நாளை மறுமையில்) சொல்லப்படும். "நீர் குர்ஆனை ஓதிக்கொண்டு சுவர்க்கத்தின் (படித்தரத்தில்) ஏறிக்கொண்டு செல்வீராக. உலகத்தில் நிறுத்தி நறுத்தி ஓதியது போன்று (இங்கேயும்) நிறுத்தி நிறுத்தி ஓதுவீராக. நீர் ஒதி முடிக்கும் கடைசி ஆயத்தே சுவர்க்கத்தின் உமது அந்தஸ்தாகும்" என அவருக்குக் கூறப்படும் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அபூதாவூத் , திர்மிதி)
**4-** குர்ஆனில் ஓர் எழுத்தை யார் ஓதுகின்றாரோ அவருக்கு ஒரு நன்மை எழுதப்படும். ஒரு நன்மைக்கு பத்து மடங்கு நன்மை கொடுக்கப்படும். "அலிஃப், லாம், மீம் என்பது ஒரு எழுத்து" என்று நான் சொல்லமாட்டேன். அலிஃப் என்பது ஒரு எழுத்தாகும், லாம் என்பது ஒரு எழுத்தாகும், மீம் என்பது ஒரு எழுத்தாகும் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (திர்மிதி)
"குர்ஆனை ஓதுவதினால் எந்த அளவக்கு நன்மைகள் குவிகின்றன" என்பதை எண்ணிப்பாருங்கள். நீங்களும் இந்தக் குர்ஆனை ஒவ்வொரு நாளும் உரிய முறையில் ஓதப்பழகிக் கொள்ளுங்கள். அதன் மொழியாக்கத்தையும் படிப்பினை பெற வேண்டுமென்ற நோக்கத்தோடு நிதானமாகப்படியுங்கள். அதன் ஏவல் விலக்கல்களை எடுத்தும் தவிர்த்தும் நடவுங்கள். நிச்சயமாக அல்லாஹ் நமது ஈருலக வாழ்க்கையையும் வெற்றி உள்ள வாழ்க்கையாக ஆக்கப் போதுமானவன். யா அல்லாஹ்! "இந்தக் குர்ஆனை நாளை மறுமையில் எங்களுக்கு சிபாரிசு செய்யக்கூடிய குர்ஆனாக" ஆக்கி வைப்பாயாக.

# أَحْكَامُ النُّوْنِ السَّاكِنَةِ

## சுக்கூன் செய்யப்பட்ட நூனின் نْ சட்டங்கள்

சுக்கூன் செய்யப்பட்ட நூனில் نْ நான்கு சட்டங்கள் உள்ளன. அவை.

1. إِدْغَامٌ - இணைத்தல்
2. إِظْهَارٌ - வெளியாக்குதல்
3. إِقْلَابٌ- மாற்றுதல்
4. إِخْفَاءٌ - மறைத்தல்

## 1. إِدْغَامٌ - இத்காம் (இணைத்தல்)

இணைத்தல் என்பது சுக்கூன் செய்யப்பட்ட நூனுடைய نْ உச்சரிப்பை அடுத்து வரும் எழுத்துக்களுடன் இணைத்து ஓதுதலாகும்.

إِدْغَامٌ உடைய எழுத்துக்கள் ஆறு. அவை:ن ، و ، ل ، م ، ر ، ي

சுருக்கமாக ( يَرْمَلُوْنَ ) என்று விளங்கிக் கொள்ளலாம்.

இணைத்தல் இரண்டு வகைப்படும். அவை:

1. إِدْغَامٌ بِغُنَّةٍ
2. إِدْغَامٌ بِغَيْرِ غُنَّةٍ

### إِدْغَامٌ بِغُنَّةٍ இதுகாமுன் பிகுன்னா

குன்னாவுடன் இத்காம் செய்தல்

إِدْغَامُ بِغُنَّة என்பது சுக்கூன் செய்யப்பட்ட நூனை نْ அடுத்து ن ، و ، م ، ي என்ற எழுத்துக்களில் ஓர் எழுத்து வந்தால் அப்போது சுக்கூன் செய்யப்பட்ட நூனுடைய نْஉச்சரிப்பை அடுத்து வரும் எழுத்துடன் இணைத்து غَنَّةٌ வுடன் ஓதவேண்டும். (غُنَّةٌ என்பது மூக்கின் அடிப்பகுதியிலிருந்து வெளிப்படுத்தும் சத்தத்திற்குச் சொல்லப்படும்).

**உதாரணம்**

1. ي – وَ مَنْ يَّعْمَلْ مِثْقَالَ ذَرَّةٍ خَيْرًا يَّرَهُ
2. م – مِنْ مَّرْقَدِنَا

3. ن – مِنْ نَّبَإِ مُوْسَى وَ فِرْعَوْنَ

4. و – وَمِنْ وَّرَاءِ هِمْ

விளக்கம் : உ-ம் 1 ஐ கவனிக்க :- (إِدْغَامٌ بِغُنَّةٍ)

وَمَنْ يَعْمَـــل உதாரணமாக அடிக்கோடிட்ட இடத்தில் மன் யஃமல் என்று சாதாரணமாக நாம் வாசிப்போம். ஆனால் إِدْغَـــامٌ بِغُنَّـــةٍ வுடைய சட்டத்தின்படி சுக்கூன் செய்யப்பட்ட நூனை نْ யாي உடன் இணைத்து மய்யஃமல் என غُنَّةٌ வுடன் ஓதவேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

**முக்கிய குறிப்பு**

ஒரு வார்த்தையின் கடைசியில் சுக்கூன் செய்யப்பட்ட நூனும் அதனை அடுத்து இருக்கும் வார்த்தையின் ஆரம்பத்தில் இத்காம் பிகுன்னாவுடைய எழுத்து வரும்போதுதான் இத்காம் பிகுன்னா என்பது வரும். இதற்கு உதாரணம் மேலே கூறப்பட்டிருக்கின்றது. ஆனால் ஒரே வார்த்தையில் சுக்கூன் செய்யப்பட்ட நூனும் அதே வார்த்தையில் அதனையடுத்து இத்காம் பிகுன்னாவுடைய எழுத்தும் வந்தால் இங்கே இத்காம் செய்யாமல் நூனுடைய சத்தத்தை வெளிப்படுத்தி ஓதுவது அவசியமாகும். இப்படி குர்ஆனில் நான்கு வார்த்தைகள் மாத்திரமே வந்திருக்கின்றது. அவைகள் பின்வருமாறு. دُنْيَا ، قِنْوَانٌ ، صِنْوَانٌ ، بُنْيَانٌ

## إِدْغَامٌ بِغَيْرِ غُنَّةٍ இதுகாமுன் பிகைரி குன்னா

குன்னா இல்லாமல் இத்காம் செய்வது

إِدْغَامٌ بِغَيْرِ غُنَّةٍ என்பது சுக்கூன் செய்யப்பட்ட நூனை نْ அடுத்து ل ، ر என்னும் இரு எழுத்துக்களில் ஓர் எழுத்து வந்தால் அப்போது சுக்கூன் செய்யப்பட்ட நூனை نْ அடுத்து வரும் எழுத்துடன் இணைத்து غُنَّةٌ இல்லாமல் (சத்தத்தை மூக்கால் வெளிப்படுத்தாமல்) ஓதவேண்டும்.

**உதாரணம்**

1. ر – مِنْ رَّبِّ الرَّحِيْمِ

2. ل – مِنْ لَّدُنْكَ رَحْمَةً

விளக்கம் : உ-ம் 1 ஐ கவனிக்க :- (إِدْغَامٌ بِغَيْرِ غُنَّةٍ)

مِـــنْ رَّبِّ அடிக்கோடிட்ட இடத்தில் மின் ரப்பி என்று நாம் சாதாரணமாக வாசிப்போம். ஆனால் إِدْغَـــامٌ بِغَيْـــرِ غُنَّـــةٍ வுடைய சட்டத்தின்படி சுக்கூன் செய்யப்பட்ட நூனை نْ றா ر - உடன் இணைத்து மிர்ரப்பி என غُنَّـــةٌ இல்லாமல் ஓதவேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

## 2. إِظْهَارٌ - இல்ஹார் (வெளிப்படுத்துதல்)

إِظْهَـــارٌ – என்பது சுக்கூன் செய்யப்பட்ட நூனை نْ அடுத்து இல்ஹாருடைய ஆறு எழுத்துக்களில் ஏதேனும் ஓர் எழுத்து வந்தால் சுக்கூன் செய்யப்பட்ட நூனின் உச்சரிப்பை கூட்டாமலும் குறைக்காமலும் உள்ளபடியே ஓதுதலாகும். இல்ஹாருடைய எழுத்துக்கள் பின்வருமாறு. ،ء ، هـــ غ ، ع ، خ ، ح

### உதாரணம்

1. ح - فَصَلِّ لِرَبِّكَ وَانْحَرْ
2. خ - وَ أَمَّا مَنْ خَفَّتْ مَوَازِيْنُهُ
3. ع - خَلَقَ الْإِنْسَانَ مِنْ عَلَقٍ
4. غ - نُزُلاً مِنْ غَفُوْرٍ رَّحِيْمٍ
5. ه - مَا أَغْنَى عَنْهُ مَالُهُ
6. ء - مِنْ أَهْلِ الْكِتَابِ

விளக்கம் : உ-ம் 1 ஐ கவனிக்கவும்.

وَانْحَـــر (வன்ஹர்) - இங்கே சுக்கூன் செய்யப்பட்ட நூனுக்கு نْ பிறகு إِظْهَـــارٌ உடைய எழுத்துக்களில் ح என்னும் எழுத்து வந்துள்ளது. இல்ஹாருடைய சட்டத்தின் படி சுக்கூன் செய்யப்பட்ட நூனை ن ஐ வன்ஹர் என்று கூட்டாமலும் குறைக்காமலும் உள்ளபடியே உச்சரிக்க வேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

## 3. إِقْلاَبٌ - இக்லாப் (மாற்றுதல்)

இக்லாப் என்பது: சுக்கூன் செய்யப்பட்ட நூனை ن அடுத்து **ب** வந்தால் சுக்கூன் செய்யப்பட்ட நூனில் نْ வரும் **ன்**என்ற உச்சரிப்பை **ம்** என்று மாற்றி غُنَّـــةٌ வுடன் ஓதுதலாகும்.

### உதாரணம்

ب – مِنْ بَيْنِ أَيْدِيْهِمْ

விளக்கம் : -

சுக்கூன் செய்யப்பட்ட நூனை نْ அடுத்து ب வந்திருப்பதால் மின் பைனி என்பதற்கு பதிலாக மிம்பைனி என்று غُنَّةٌ வுடன் ஓதவேண்டும்.

## 4. إِخْفَاءٌ - இக்பா

**மறைத்தல்**

இக்பா என்பது: சுக்கூன் செய்யப்பட்ட நூனை அடுத்து இக்பா உடைய பதினைந்து எழுத்துக்களில் ஏதாவதொரு எழுத்து வந்தால் சுக்கூன் செய்யப்பட்ட நூனுடைய نْ உச்சரிப்பை பாதியாக மறைத்து غُنَّـــةٌ உடன் ஓதுதலாகும். இக்பா உடைய எழுத்துக்கள் பின்வருமாறு.

ت ، ث ، ج ، د ، ذ ، ز ، س ، ش ، ص ، ض ، ط ، ظ ، ف ، ق ، ك

**உதாரணம்**

1. ت – قَدْ أَفْلَحَ مَنْ تَزَكَّى
2. ث – وَ مَا خَلَقَ الذَّكَرَ وَالْأُنْثَى
3. ج – وَ لاَ يُغْنِى مِنْ جُوْعٍ
4. د – وَ قَدْ خَابَ مَنِ دَسَّاهَا
5. ذ – فَأَنْذَرْتُكُمْ نَارًا تَلَظَّى
6. ز – قَدْ أَفْلَحَ مَنْ زَكَّهَا
7. س – سَنُقْرِئُكَ فَلاَ تَنْسَى
8. ش – مِنْ شَرِّ مَا خَلَقَ
9. ص – فَإِذَا فَرَغْتَ فَانْصَبْ
10. ض – إِلاَّ مِنْ ضَرِيْعٍ
11. ط – لَتَرْكَبُنَّ طَبْقًا عَنْ طَبَقٍ
12. ظ – فَلْيَنْظُرِ الْإِنْسَانُ مِمَّ خُلِقَ
13. ف – كَالْعِهْنِ الْمَنْفُوْشِ

14. ق – الَّذِي أَنْقَضَ ظَهْرَكَ

15. ك – وَوَضَعْنَا عَنْكَ وِزْرَكَ

விளக்கம் 13 ஐ கவனிக்க :-

الْمَنْفُوْشِ – இங்கே சுக்கூன் செய்யப்பட்ட நூனு نْ க்கு பிறகு إِخْفَـــاءٌ உடைய எழுத்து ف வந்துள்ளது. இக்பா உடைய சட்டத்தின்படி சுக்கூன் செய்யப்பட்ட நூனை نْ பாதியாக மறைத்து غُنَّـــةٌ வுடன் ஓதவேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

## أَحْكَامُ التَّنْوِيْنِ

## தன்வீனின் ـً , ـٍ , ـٌ சட்டங்கள்

தன்வீனில் ـً , ـٍ , ـٌ நான்கு சட்டங்கள் உள்ளன. அவை :

1. إِدْغَامٌ - இணைத்தல்
2. إِظْهَارٌ - வெளியாக்குதல்
3. إِقْلاَبٌ - மாற்றுதல்
4. إِخْفَاءٌ - மறைத்தல்

## 1. إِدْغَامٌ - இணைத்தல்

இணைத்தல் என்பது தன்வீனுடைய ـً , ـٍ , ـٌ உச்சரிப்பை அடுத்து வரும் எழுத்துக்களுடன் இணைத்து ஓதுதலாகும்.

إِدْغَامٌ உடைய எழுத்துக்கள் ஆறு. அவை: ن ، و ، ل ، م ، ر ، ي

சுருக்கமாக ( يَرْمَلُوْنَ ) என்று விளங்கிக் கொள்ளலாம்.

இணைத்தல் இரண்டு வகைப்படும். அவை:

1. إِدْغَامٌ بِغُنَّةٍ

3. إِدْغَامٌ بِغَيْرِ غُنَّةٍ

إِدْغَامٌ بِغُنَّةٍ இதுகாமுன் பிகுன்னா

குன்னாவுடன் இத்காம் செய்தல்

إِدْغَامٌ بِغُنَّةٍ என்பது தன்வீனை ــً , ــٍ , ــٌ அடுத்து ن ، و ، م ، ي என்ற எழுத்துக்களில் ஓர் எழுத்து வந்தால் அப்போது தன்வீனுடைய ــً , ــٍ , ــٌ உச்சரிப்பை அடுத்து வரும் எழுத்துடன் இணைத்து غُنَّةٌ வுடன் ஓதவேண்டும். (غُنَّةٌ என்பது மூக்கின் அடிப்பகுதியிலிருந்து வெளிப்படுத்தும் சத்தத்திற்குச் சொல்லப்படும்).

## உதாரணம்

1. ي – يَوْمَئِذٍ يَّصْدُرُ النَّاسُ أَشْتَاتًا
2. م – تَرْمِيْهِمْ بِحِجَارَةٍ مِنْ سِجِّيْلٍ
3. ن – سُلْطَانًا نَّصِيْرًا
4. و – بُكْرَةً وَّ أَصِيْلاً

விளக்கம் : உ-ம் 1 ஐ கவனிக்க :- (إِدْغَامٌ بِغُنَّةٍ)

يَوْمَئِذٍ يَّصْدُرُ என்ற வார்த்தையில் அடிக்கோடிட்ட இடத்தில் சாதாரணமாக **யவ்மஇதின் யஸ்துரு** என்று நாம் ஓதுவோம். ஆனால் إِدْغَامٌ بِغُنَّةٍ வுடைய சட்டத்தின்படி தன்வீனை ــً , ــٍ , ــٌ யாي உடன் இணைத்து **யவ்மஇதிய் யஸ்துரு** என غُنَّةٌ வுடன் ஓதவேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

## إِدْغَامٌ بِغَيْرِ غُنَّةٍ இதுகாமுன் பிகைரி குன்னா

குன்னா இல்லாமல் இத்காம் செய்வது

إِدْغَامٌ بِغَيْرِ غُنَّةٍ என்பது தன்வீனை ــً , ــٍ , ــٌ அடுத்து ل ، ر என்னும் இரு எழுத்துக்களில் ஓர் எழுத்து வந்தால் அப்போது தன்வீனுடைய ــً , ــٍ , ــٌ எழுத்தை அடுத்து வரும் எழுத்துடன் இணைத்து غُنَّةٌ இல்லாமல் (சத்தத்தை மூக்கால் வெளிப்படுத்தாமல்) ஓதவேண்டும்.

## உதாரணம்

1. ر – غَفُوْرًا رَّحِيْمًا
2. ل – فَوَيْلٌ لِّلْمُصَلِّيْنَ

விளக்கம் : உ-ம் 2 ஐ கவனிக்க :- (إِدْغَامٌ بِغَيْرِ غُنَّةٍ)

غَفُــوْرًا رَّحِيْمًــا என்ற வார்த்தையில் அடிக்கோடிட்ட இடத்தில் **க∴பூரன் ரஹீமா** என்று நாம் சாதாரணமாக ஓதுவோம். ஆனால் إِدْغَامٌ بِغَيْرِ غُنَّةٍ வுடைய சட்டத்தின்படி தன்வீனை ـــً , ـــٍ , ـــٌ ரா ر உடன் இணைத்து **க∴பூரர்ரஹீமா** என غُنَّـــةٌ இல்லாமல் ஓதவேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

## 2. إِظْهَارٌ - இல்ஹார்

## வெளிப்படுத்துதல்

إِظْهَارٌ – வெளிப்படுத்துதல் என்பது தன்வீனை ـــً , ـــٍ , ـــٌ அடுத்து இல்ஹாருடைய ஆறு எழுத்துக்களில் ஏதேனும் ஓர் எழுத்து வந்தால் அப்போது தன்வீனின் உச்சரிப்பை, கூட்டாமலும் குறைக்காமலும் உள்ளபடியே ஓதுதலாகும். இல்ஹாருடைய எழுத்துக்கள் பின்வருமாறு.

ح ، خ ، ع ، غ ، هـــ ،ء

### உதாரணம்

1. ح - نَارٌ حَامِيَةٌ
2. خ - مِثْقَالَ ذَرَّةٍ خَيْرًا يَّرَهُ
3. ع - ثُمَّ لَتُسْئَلُنَّ يَوْمَئِذٍ عَنِ النَّعِيْمِ
4. غ - ثُمَّ نَضْطَرُّهُمْ إِلَى عَذَابٍ غَلِيْظٍ
5. ه - سَلاَمٌ هِيَ حَتَّى مَطْلَعِ الْفَجْرِ
6. ء - وَمِنْ شَرِّ غَاسِقٍ إِذَا وَقَبَ

விளக்கம் : உ-ம் 1 ஐ கவனிக்கவும்.

نَارٌ حَامِيَةٌ நாருன் ஹாமியா - இந்த உச்சரிப்பில் ـــً , ـــٍ , ـــٌ தன்வீனுக்குப் பிறகு إِظْهَـــارٌ உடைய எழுத்துக்களில் ح என்னும் எழுத்து வந்துள்ளது. இல்ஹாரின் சட்டத்தின் படி நாருன் என்னும் வார்த்தையில் உள்ள ـــً , ـــٍ , ـــٌ (தன்வீன்) ஐ கூட்டாமலும் குறைக்காமலும் நாருன் ஹாமியா என்று உள்ளபடியே உச்சரிக்கவேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக்கொள்ளவும்.

## 3. إِقْلاَبٌ - இக்லாப் (மாற்றுதல்)

இக்லாப் என்பது: தன்வீனை ـــً , ـــٍ , ـــٌ அடுத்து ب வந்தால் தன்வீனில் ـــً , ـــٍ , ـــٌ வரும் ன் என்ற உச்சரிப்பை ம் என்று மாற்றி غُنَّةٌ வுடன் ஓதுதலாகும்.

**<u>உதாரணம்</u>**

**ب – خَبِيْرٌ بَصِيْرٌ**

விளக்கம் : -

தன்வீனை ـــً , ـــٍ , ـــٌ அடுத்து ب வந்திருப்பதால் க(خ)பீருன் பசீர் என்பதற்கு பதிலாக க (خ)பீரும்பசீர் என்று غُنَّةٌ வுடன் ஓதவேண்டும்.

## <u>4. إِخْفَاءٌ - இக்பா (மறைத்தல்)</u>

இக்பா என்பது: தன்வீனை அடுத்து இக்பா உடைய பதினைந்து எழுத்துக்களில் ஏதாவதொரு ஓர் எழுத்து வந்தால் தன்வீனுடைய உச்சரிப்பை பாதியாக மறைத்து غُنَّةٌ வுடன் ஓதுதலாகும். இக்பா உடைய எழுத்துக்கள் பின்வருமாறு.

**ت ، ث ، ج ، د ، ذ ، ز ، س ، ش ، ص ، ض ، ط ، ظ ، ف ، ق ، ك**

**<u>உதாரணம்</u>**

1. ت – فَأَنْذَرْتُكُمْ نَارًا تَلَظّٰى
2. ث – مُطَاعٍ ثَمَّ أَمِيْنٌ
3. ج – فِيْهَا عَيْنٌ جَارِيَةٌ
4. د – كَلاَّ إِذَا دُكَّتِ الأَرْضُ دَكًّا دَكًّا
5. ذ – يَتِيْمًا ذَا مَقْرَبَةَ
6. ز – صَعِيْدًا زَلَقًا
7. س – وَ رَجُلاً سَلَمًا لِرَجُلٍ
8. ش – يَوْمَئِذٍ شَأْنٌ يُغْنِيْهِ
9. ص – وَ جَاءَ رَبُّكَ وَ الْــمَلَكُ صَفًّا صَفًّا
10. ض – وُجُوهٌ يَوْمَئِذٍ مُّسْفِرَةٌ ضَاحِكَةٌ مُّسْتَبْشِرَةٌ
11. ط – وَ سَبِّحْهُ لَيْلاً طَوِيْلاً

12. ظ – ظِلاًّ ظَلِيْلاً

13. ف – أَوْ إِطْعَامٌ فِيْ يَوْمٍ

14. ق – فِيْهَا كُتُبٌ قَيِّمَةٌ

15. ك – نَاصِيَةٍ كَاذِبَةٍ

விளக்கம் 13 ஐ கவனிக்க :-

إِطْعَامٌ فِيْ - இந்த வார்த்தையில் தன்வீனுக்குப் ـً , ـٍ , ـٌ பிறகு இக்பா உடைய எழுத்து ف வந்துள்ளது. இக்பாவின் சட்டத்தின்படி தன்வீனை ـً , ـٍ , ـٌ பாதியாக மறைத்து غُنَّـةٌ வுடன் ஓதவேண்டும். இதைப் போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

## أَحْكَامُ الْمِيْمِ السَّاكِنَةِ

## சுக்கூன் செய்யப்பட்ட மீமின் சட்டங்கள்

சுக்கூன் செய்யப்பட்ட மீமில் மூன்று சட்டங்கள் உள்ளன. அவை :

1. إِدْغَامٌ - இணைத்தல்
2. إِخْفَاءٌ - மறைத்தல்
3. إِظْهَارٌ - வெளியாக்குதல்

### 1. إِدْغَامٌ - இத்காம் (இணைத்தல்)

இணைத்தல் என்பது: சுக்கூன் செய்யப்பட்ட மீமை அடுத்து இன்னும் ஒரு மீம் வந்தால் அந்த மீமுடன் சுக்கூன் செய்யப்பட்ட மீமைஇணைத்து (ஷத்து செய்து) غُنَّـةٌ வுடன் ஓதுதலாகும். (غُنَّـةٌ என்பது மூக்கின் அடிப்பகுதியிலிருந்து வெளிப்படுத்தும் சத்தத்திற்குச் சொல்லப்படும்.)இத்காம் உடைய எழுத்து மீமாகும்.

உதாரணம்

أَطْعَمَهُمْ مِّنْ جُوْعٍ وَ ءَامَنَهُمْ مِنْ خَوْفٍ

أَطْعَمَهُمْ مِّـــنْ - மேற்கண்ட உதாரணத்தில் மீம் சுக்கூன் செய்யப்பட்டு அதையடுத்து إِدْغَـــامٌ உடைய எழுத்து மீம் வந்துள்ளது. எனவே إِدْغَـــامٌ உடைய சட்டத்தின் படி சுக்கூன் செய்யப்பட்ட மீமை إِدْغَـــامٌ உடைய எழுத்து மீமுடன் இணைத்து (ஷத்து செய்து) غُنَّـــةٌ வுடன் ஓதவேண்டும்.

### 2. إِخْفَاءٌ - இக்பா (மறைத்தல்)

மறைத்தல் என்பது: சுக்கூன் செய்யப்பட்ட மீமுக்குப் பின் பா ب என்ற எழுத்து வந்தால் மீமை மறைத்தும் மறைக்காமலும் குன்னாவுடன் ஓதுதலாகும். إِخْفَـــاء வுடைய எழுத்து ب ஆகும்.

உதாரணம்

تَرْمِيْهِمْ بِــــحِجَارَةٍ مِنْ سِجِّيْلٍ

تَــرْمِيْهِمْ بِـــــحِجَارَةٍ - மேற்கண்ட உதாரணத்தில் மீம் சுக்கூன் செய்யப்பட்டு அதையடுத்து إِخْفَـــاء வுடைய எழுத்து ب வந்துள்ளது. எனவே إِخْفَـــاء வுடைய சட்டத்தின் படி சுக்கூன் செய்யப்பட்ட மீமை மறைத்தும் மறைக்காமலும் (பாதியாக மறைத்து) غُنَّـــةٌ உடன் ஓதவேண்டும். إِخْفَاء வுடைய எழுத்து ب ஆகும்

3. إِظْهَارٌ – இல்ஹார்

வெளிப்படுத்துதல்

(அதாவது ب ، م தவிர மற்ற அனைத்து எழுத்துக்களும் إظهــــار உடைய எழுத்துக்களாகும்).

இல்ஹார் என்பது: சுக்கூன் செய்யப்பட்ட மீமுக்குப்பிறகு மேலே கூறப்பட்ட ب ، م அல்லாத ஏனைய 26 எழுத்துக்களில் எந்த ஓர் எழுத்து வந்தால் சுக்கூன் செய்யப்பட்ட மீமை இச்சட்டத்தின்படி எந்த மாற்றமுமில்லாமல் உள்ளதை உள்ளபடியே வெளியாக்கி ஓத வேண்டும்.

إظهار உடைய எழுத்துக்கள் :

ا ، ء ، ت ، ث ، ج ، ح ، خ ، د ، ذ ، ر، ز ، س ، ش ، ص ، ض ، ط ، ظ ع ، غ ، ف ، ق ، ك

ل ، ن ، و ، هــ ، ي ،

உதாரணம்

1. ا அல்லது ء – وَالَّذِيْنَ كَفَرُوْا بِأَيِتِنَاهُمْ أَصْحَابُ الْمَشْأَمَةِ

2. ت – أَلَـــمْ تَرَ كَيْفَ فَعَلَ رَبُّكَ بِأَصْحَبِ الْفِيْلِ

3. ث – إِنَّ إِلَيْنَا إِيَابَهُمْ ثُــمَّ إِنَّ عَلَيْنَا حِسَابَهُمْ

4. ج – جَزَاؤُهُمْ عِنْدَ رَبِّــهِمْ جَنّتٌ

5. ح – وَمَا أُرْسِلُوْا عَلَيْهِمْ حَفِظِيْنَ

6. خ – أُولَئِكَ هُمْ خَيْرُ الْبَرِيَّةِ

| | | | |
|---|---|---|---|
| 7. | د | - | لَكُمْ دِيْنُكُمْ وَلِيَ دِيْنِ |
| 8. | ذ | – | وَإِذَا غَرَبَتْ تَقْرِضُهُمْ ذَاتَ الشِّمَالِ |
| 9. | ر | – | إِلَفِهِمْ رِحْلَةَ الشِّتَاءِ وَالصَّيْفِ |
| 10. | ز | – | فَتَقَطَّعُوْا أَمْرَهُمْ بَيْنَهُمْ زُبُرًا |
| 11. | س | – | وَالشَّمْسِ وَضُحَهَا |
| 12. | ش | – | أُولَئِكَ هُمْ شَرُّ الْبَرِيَّة |
| 13. | ص | – | إِنْ كُنْتُمْ صَادِقِيْنَ |
| 14. | ض | – | لَاأَبْرَحُ حَتَّى اَبْلُغَ مَجْمَعَ الْبَحْرَيْنِ اَوْ أَمْضِيَ حُقْبًا |
| 15. | ط | – | وَ أَرْسَلَ علَيْهِمْ طَيْرًا أَبَابِيْلَ |
| 16. | ظ | – | وَدَانِيَةً عَلَيْهِمْ ظِلَلُهَا وَذُلِّلَتْ كُطُوْفُهَا تَذْلِيْلًا |
| 17. | ع | – | فَوَسَطْنَ بِهِ جَـــمْعًا |
| 18. | غ | – | صِرَاطَ الَّذِيْنَ أَنْعَمْتَ عَلَيْهِمْ غَيْرِ الْمَغْضُوْبِ عَلَيْهِمْ ولاالضالين |
| 19. | ف | – | أَلَـــمْ يَـــْجْعَلْ كَيْدَهُمْ فِيْ تَضْلِيْلٍ |
| 20. | ق | – | وَإِذَا رَاَوْهُمْ قَالُوْا إِنَّ هَؤُلَاءِ لَضَالُّوْنَ |
| 21. | ك | – | فَجَعَلَهُمْ كَعَصْفٍ مَأْكُوْلٍ |
| 22. | ل | – | إِنَّ سَعْيَكُمْ لَشَتَّى |
| 23. | ن | – | وَيَـــمْنَعُوْنَ الْـــمَاعُوْنَ |
| 24. | و | – | لَكُمْ دِيْنُكُمْ وَلِيَ دِيْنِ |
| 25. | هـــ | – | وَاهْجُرْهُمْ هَجْرًا جَمِيْلًا |
| 26. | ي | – | أَلَـــمْ يَـــجْعَلْ كَيْدَهُمْ فِيْ تَضْلِيْلٍ |

<u>விதிவிலக்கு</u>

சுக்கூன் செய்யப்பட்ட மீமுக்குப்பிறகு ف அல்லது و என்ற எழுத்து வந்தால் சுக்கூன் செய்யப்பட்ட மீமை நன்றாக வெளியாக்கி ஓதவேண்டும்.

<u>உதாரணம்</u>

ف - وَلَكُمْ فِيْ الْأَرْضِ

و - وَمِنْ آبَاءِهِمْ وَذُرِّيَاتِـــهِمْ

சுக்கூன் செய்யப்பட்ட மீமுடைய மூன்று சட்டங்களையும் உள்ளடக்கிய ஆயத்து "சூரத்துல் ஹாமீம் ஸஜ்தாவிலுள்ள" பின்வரும் ஆயத்தாகும்.

وَذَلِكُمْ ظَنُّكُمُ الَّذِيْ ظَنَنْتُمْ بِرَبِّكُمْ فَارْدَاكُمْ فَأَصْبَحْتُمْ مِنَ الْـــخسِرِيْنَ

## "ஷத்து செய்யப்பட்ட நூன் மற்றும் மீமின்" சட்டங்கள்

நூன் அல்லது மீம் ஷத்து செய்யப்பட்டு வந்தால் "இரண்டு விரல் அளவு" குன்னா செய்து ஓத வேண்டும்.

**<u>நூனுக்கு உதாரணம்</u>**

مِنَ الْجِنَّةِ وَالنَّاسِ

இங்கே الجِنَّةِ وَالنَّاسِ அல்ஜின்னதி வன்னாஸி என்ற இரு வார்த்தையிலும் ஷத்து செய்யப்பட்ட நூன்கள் இருக்கின்றன. ஆகவே இரண்டு விரல் அளவு குன்னா செய்து ஓத வேண்டும்.

**<u>மீமுக்கு உதாரணம்</u>**

عَمَّ يَتَسَاءَلُوْنَ

இங்கே عَمَّ அம்ம என்னும் வார்த்தையில் மீம் ஷத்து செய்யப்பட்டுள்ளது. ஆகவே இரண்டு விரல் அளவு குன்னா செய்து ஓத வேண்டும்.

குறிப்பு :-
ஷத்து செய்யப்பட்ட நூனிலோ அல்லது மீமிலோ "வக்ஃப்" செய்தால் குன்னாவை மிக தெளிவு படுத்தி வக்ஃபு செய்ய வேண்டும்.

<u>நூனுக்கு உதாரணம்</u>

وَقَرْنَ فِى بُيُوْتِكُنَّ

இங்கே “ஷத்து செய்யப்பட்ட நூனில் வக்ஃபு” செய்யப்பட்டிருக்கின்றது. ஆகவே “**புயூதிகுன்**” என்று குன்னாவை மிகத் தெளிவு படுத்தி “வக்ஃபு” செய்ய வேண்டும்.

## اللاَّمُ الْقَمَرِيَّةِ

## அல்லாமுல் கமரிய்யா

அல்லாமுல் கமரிய்யா என்பது ( اَلْ ) அல்லுடைய லாமிற்குப் பிறகு ا، ب، غ، ح، ج، ك، و) خ، ف، ع، ق، ي، م، هـ) என்ற 14 எழுத்துக்களில் ஏதாவது ஓர் எழுத்து வந்தால் லாமுக்கு சுக்கூன் செய்து லாமையும் சேர்த்துப் படிக்க வேண்டும். இதற்கு “சந்திர எழுத்துக்கள்” என்று சொல்லப்படும்.

| உதாரணம் | சந்திர எழுத்துக்கள் |
|---|---|
| إِنَّ الْإِنْسَانَ | ا |
| رَبَّ هَذَا الْبَيْتِ | ب |
| وَلَا تَكُنْ مِنَ الْغَافِلِيْن | غ |
| الْحَمْدُ لِلّهِ | ح |
| الْجِنَّة | ج |

| | |
|---|---|
| الْكَافِرُوْن | ك |
| الْوَعْد | و |
| الْخَنَّاس | خ |
| يَوْمَ الْفَصْلِ | ف |
| الْعَالَمِيْنَ | ع |
| الْقَارِعَةُ | ق |
| فِى الْيَمِّ | ي |
| الْمَلَائِكَة | م |
| الْهُدَى | هــ |

## اللَّامُ الشَّمْسِيَّةِ

## அல்லாமுஷ்ஷம்ஷிய்யா

அல்லாமுல் ஷம்ஷிய்யா என்பது ( اَلْ ) அல்லுடைய லாமிற்குப் பிறகு ط ، ث، ص، ر، ت، ض، ذ، ن، د، س، ظ، ز، ش، ل என்ற 14 எழுத்துக்களில் ஏதாவது ஓர் எழுத்து வந்தால் லாமை உச்சரிக்காமல் லாமுக்குப் பின்னால் உள்ள எழுத்தை ஷத்து செய்து படிக்க வேண்டும். இதற்கு **"சூரிய எழுத்துக்கள்"** என்று சொல்லப்படும்.

| உதாரணம் | சூரிய எழுத்துக்கள் |
|---|---|
| الطَّامَّة | الطَّاءُ |
| الثَّمَرَات | الثَّاءُ |
| الصَّبْر | الصَّادُ |
| الرَّاكِعُوْن | الرَّاءُ |
| التَّائِبُوْن | التَّاءُ |

| | |
|---|---|
| الضُّحى | الضَّادُ |
| الذَّارِيَات | الذّالُ |
| النَّارُ | النُّوْنُ |
| الدَّهْرُ | الدَّالُ |
| السَّاعَةُ | السِّيْنُ |
| الظَّالِمُوْنَ | الظَّاءُ |
| الزَّقُّوْمُ | الزَّايُ |
| الشَّمْسُ | الشِّيْنُ |
| اللَّيْلُ | اللاَّمُ |

اَلْـــــمَدُّ

## மத்தின் சட்டங்கள்

**மத்து என்றால் நீட்டுதல் என்று பொருள்**

மத்துடைய எழுத்துக்கள் மூன்று. அவை : و ، ا ، ي எளிதில் விளங்கிக்கொள்வதற்காக "வாய்" என்று விளங்கிக் கொள்ளுங்கள்.

1. و சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன் உள்ள எழுத்து ـُـ லம்மு செய்யப்பட்டு இருக்க வேண்டும்.

2. ا சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன் உள்ள எழுத்து ـَـ பத்ஹு செய்யப்பட்டு இருக்க வேண்டும்.

3. ي சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன் உள்ள எழுத்து ـِـ கஸ்று செய்யப்பட்டு இருக்க வேண்டும்.

இம்மூன்று எழுத்துக்களும் மேலே கூறப்பட்ட முறைப்பிரகாரம் வரும்பொதுதான் அதற்கு "மத்துடைய எழுத்து" என்று கூறப்படும், அப்படி வரவில்லையென்றால் அதற்கு மத்துடைய எழுத்து என்று சொல்லப்படமாட்டாது, சாதாரண ஓர் எழுத்தாகவே அதை நினைத்துக்கொள்ள வேண்டும்.

**மத்து இரண்டு வகை**

1. مـــدُّ الأَصْلِيُّ - அடிப்படையான மத்து

2. مـــدُّ الْـــفَرَعِـــيُّ - பிரிந்த மத்து

## اَلْمَدُّ الأَصْلِي அல் மத்துல் அஸ்லி

## (அடிப்படையான மத்து )

மத்துடைய எழுத்துக்கு முன் அல்லது பின் ஹம்ஸ் ء வராமலும் மற்றும் சுக்கூன் வராமலும் இருக்க வேண்டும். இந்த நிபந்தனைக்குட்பட்டிருந்தால் அதனை **இரண்டு விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி** ஓதவேண்டும்.

உதாரணம்

1. و - غَيْرِ الْمَغْضُوْبِ عَلَيْهِمْ وَلَا الضَّالِّيْـــنَ

2. ا - اِهْدِنَا الصِّرَاطَ الْـــمُسْتَقِيْمَ

3. ي - الذِيْنَ يُؤْمِنُوْنَ بِالْغَيْبِ وَيُقِيْمُوْنَ الصَّلَوةَ وَمِـــمَّا رَزَقْنَهُمْ يُنْفِقُوْنَ

விளக்கம் : உ-ம் 3 ஐ கவனிக்க:

يُقِيْمُوْنَ (யுகீமூன) என்னும் வார்த்தையில் யா ي சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன்னுள்ள எழுத்து கஸர் செய்யப்பட்டு வந்துள்ளது. எனவே இது "மத்துடைய எழுத்தாகும்." மத்துல் அஸ்லியினுடைய சட்டத்தின் படி மத்துடைய எழுத்தான யாவிற்கு ي முன்னரோ, பின்னரோ ஹம்ஸ் ء வரவில்லை. மேலும் மத்துடைய எழுத்தான யாவிற்கு ي பின்னர் சுக்கூனும் வரவில்லை. இது மேற்கண்ட நிபந்தனைக்குட்பட்டிருப்பதால் இது مـــد الأصـــلي அடிப்படையான மத்தாகும். ஆகவே யாவை ي **இரண்டு விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி** ஓத வேண்டும்.

## اَلْمَدُّ الصِّلَة

## அல் மத்துஸ்ஸிலா

" மத்துஸ்ஸிலா " என்பது ஹா ـه என்னும் எழுத்து ஹரக்கத்து செய்யப்பட்ட இரண்டு எழுத்துக்கு மத்தியில் வந்தால் அதை **இரண்டு விரல்களை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி** ஓத வேண்டும்.

உதாரணம்

فَقَالَ لِصَاحِبِهِ وَهُوَ يُحَاوِرُهُ أَنَا أَقَلُّ مِنْكَ

—ه ஹாவுக்குப்பின் ஹம்ஸ் ء வருமேயானால் **நான்கு விரல்களை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி** ஓத வேண்டும் .

உதாரணம்

قَالَ لَهُ صَاحِبُهُ وَهُوَيُحَاوِرُهُ أَكَفَرْتَ بِالَّذِيْ خَلَقَكَ

اَلْمَدُّ اللِّيْن

## அல் மத்துல்லீன்

“ மத்துல் லீன் ” என்பது : வக்ஃபு செய்யக்கூடிய கடைசி எழுத்துக்கு முன்னால் வரக்கூடிய எழுத்து சுக்கூன் செய்யப்பட்ட “வாவா”க அல்லது “யாவா”க இருந்து அதற்கு முன்னால் உள்ள எழுத்து பத்ஹு செய்யப்பட்டிருந்தால் இதற்கு மத்துல் லீன் என்று சொல்லப்படும். **இதை இரண்டு, அல்லது நான்கு, அல்லது ஆறு விரல்களை மடக்கக்கூடிய அல்லது நீட்டக்கூடிய** அளவிற்கு நீட்டி ஓத வேண்டும். வக்ஃபு செய்யாமல் சேர்த்துப்படிக்கும் போது நீட்டக்கூடாது.

உதாரணம்

و - عَلَيْهِمْ دَائِرَةُ السَّوْءِ

ي – لِإِيْلَافِ قُرَيْشٍ

اَلْمَدُّ الْعِوَضُ

## அல்மத்துல் இவழ்

“பத்ஹதைன்” வரக்கூடிய எழுத்தில் வக்ஃபு செய்து நிறுத்தினால் **இரண்டு விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவு நீட்டி** ஓத வேண்டும். இதற்கு “ மத்துல் இவழ் ” என்று சொல்லப்படும்.

உதாரணம்

أَلَمْ نَجْعَلِ الْأَرْضَ مِهَادًا ، وَالْجِبَالَ أَوْتَادًا ، وَخَلَقْنَاكُمْ أَزْوَاجًا

**விளக்கம்:**

“மிஹாதன்” என்ற வார்த்தையில் வக்ஃபு செய்தால் மிஹாதா என்று இரண்டு விரல் அளவு நீட்டி “வக்ஃபு” செய்ய வேண்டும். இவ்வாறே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

<u>குறிப்பு:</u>

வக்ஃபு செய்யக்கூடிய நேரத்தில் வக்ஃபு செய்யும் வார்த்தையின் கடைசி எழுத்திற்கு எந்தக் குறியீடு (ஹரக்கத்து) வந்தாலும் சுக்கூன் செய்தே வக்ஃபு செய்ய வேண்டும். வக்ஃபு

செய்யாமல் சேர்த்துப் படித்தால் உரிய ஹரக்கத்தை ஓத வேண்டும். வக்ஃபு செய்யும் வார்த்தையின் கடைசி எழுத்திற்கு பத்ஹதைன் எனும் குறியீடு வந்தால் அங்கே சுக்கூன் செய்து நிறுத்தாமல் மேலே கூறிய உதாரணத்தைப் போல் இரண்டு விரல் அளவு நீட்டி ஓத வேண்டும்.

## اَلْمَدُّ الْفَرَعِيُّ
## அல் மத்துல் ஃபரகி

மத்துடைய எழுத்திற்கு முன்னரோ அல்லது பின்னரோ ஹம்ஸ் ء வருவது. அல்லது "மத்துடைய எழுத்திற்கு பின்னர் சுக்கூன் செய்யப்பட்டு வருவதற்கு" சொல்லப்படும்.

### மத்துல் ஃபரகி ஐந்து வகைப்படும்

1. اَلْمَدُّ الْمُتَّصِلُ (اَلْوَاجِبُ)
2. اَلْمَدُّ الْمُنْفَصِلُ (اَلْجَائِزُ)
3. اَلْمَدُّ الْعَارِضُ لِلسُّكُوْنِ(اَلْجَائِزُ)
4. اَلْمَدُّالْبَدَل ( الجائز)
5. اَلْمَدُّ اللَّازِمُ

## اَلْمَدُّ الْمُتَّصِلُ (அல் மத்துல் முத்தஸில்)
## சேர்ந்து வரும் மத்து

மத்துடைய எழுத்து ஒரு வார்த்தையில் வந்து அதே வார்த்தையில் அதனையடுத்து ஹம்ஸ்ء வந்தால் அதற்கு "மத்துல் முத்தஸில்" என்று சொல்லப்படும். இந்த மத்துடைய எழுத்தை நான்கு அல்லது ஐந்து விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓத வேண்டும்.

உதாரணம்

1. و – سُوْءَ الْعَذَاب
2. ا – وَجَاءَ رَبُّكَ وَالْمَلَكُ صَفًّا صَفًّا
3. ي – وَجِيْءَ يَوْمَئِذٍ بِجَهَنَّمَ

விளக்கம் 2 ஐ கவனிக்க

جَــاءَ என்னும் வார்த்தையில் அலிஃப் சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன்னுள்ள எழுத்தில் பதஹ் வந்துள்ளது. எனவே இது மத்துடைய எழுத்தாகும். மத்துல் முத்தஸிலுடைய சட்டத்தின் படி மத்துடைய எழுத்திற்குப்பிறகு பிறகு அதே வார்த்தையில் ஹம்ஸ் ء வந்துள்ளதால் இதனை **நான்கு அல்லது ஐந்து விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி** ஓதவேண்டும்.

## اَلْمَدُّ الْمُنْفَصِلُ (அல்மத்துல் முன்ஃபஸில்)

### பிரிந்து வரும் மத்து

மத்துடைய எழுத்து ஒரு வார்த்தையின் கடைசியில் வந்து அதனையடுத்துள்ள வார்த்தையின் ஆரம்பத்தில் ஹம்ஸ் ء வந்தால் அதற்கு "மத்துல் முன்பஸில்" என்று சொல்லப்படும். இந்த மத்துடைய எழுத்தை **நான்கு அல்லது ஐந்து விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி** ஓதவேண்டும். (இங்கு இவ்வாறு நீட்டித்தான் ஓத வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை. ஓதுவது நல்லது. ஆனால் குறைந்தது இரண்டு விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓதவேண்டும்).

உதாரணம்

1. و – وَمَا أُمِرُوْا إِلَّا لِيَعْبُدُوْا اللهَ مُخْلِصِيْنَ لَهُ الدِّيْنَ حُنَفَاءَ
2. ا – كَلَّا إِنَّ الْإِنْسَانَ لَيَطْغَى
3. ي – اِرْجِعِيْ إِلَى رَبِّكِ رَاضِيَةً مَرْضِيَّةً

விளக்கம் 3 ஐ கவனிக்க

اِرْجِعِــيْ إِلَــى என்னும் வார்த்தையில் யாي சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன்னுள்ள எழுத்தில் கஸர் வந்துள்ளது. எனவே இது மத்துடைய எழுத்தாகும். மத்துல் முன்பஸிலுடைய சட்டத்தின் படி மத்துடைய எழுத்திற்குப் பிறகு அதனையடுத்துள்ள வார்த்தையின் ஆரம்பத்தில் ஹம்ஸ் ء வந்துள்ளதால் இதனை **நான்கு அல்லது ஐந்து விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி** ஓதவேண்டும்.

## اَلْمَدُّ الْبَدَلُ

### அல் மத்துல் பதல்

"மத்துல் பதல்" என்பது மத்துடைய எழுத்திற்கு முன் ஹம்ஸ் ء வருவதற்குச் சொல்லப்படும். இதனை **இரண்டு விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி** ஓதவேண்டும்.

உதாரணம்

ء – وَأَمَّا مَنْ ءَامَنَ

فَأَمَّا مَنْ أُوْتِيَ – و

وَيَزْدَادَ الَّذِيْنَ ءَامَنُوْا إِيْمَانًا – ي

விளக்கம் 1ஐ கவனிக்க

இங்கு அலி:ப் ا சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன்னுள்ள எழுத்தில் பதஹ் வந்துள்ளதால் இது மத்துடைய எழுத்தாகும். மேலும் **மத்துல் பதல்** உடைய சட்டத்தின்படி மத்துடைய எழுத்திற்கு முன்னால் ஹம்ஸ் ء வந்துள்ளது. எனவே இதனை **இரண்டு விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓதவேண்டும்** இதே போன்றே மற்ற உதாரணங்களையும் விளங்கிக் கொள்ளவும்.

**முக்கிய குறிப்பு**

**ا அலிப் மற்றும் ஹம்ஸ் ء பற்றிய விளக்கம்**

வார்த்தையின் ஆரம்பத்தில் அலி:ப் வடிவத்தில் ا வரக்கூடியதை ஹம்ஸ் ء என்று புரிந்து கொள்ளவேண்டும். அலி:புக்கு மேல் ஹம்ஸ் எழுதப்படாமல் இருந்தாலும் சரியே. மேலும் வார்த்தையின் எந்த இடத்தில் ஹம்ஸ் ء வந்தாலும் அதனை ஹம்ஸ் ء என்றே புரிந்துகொள்ளவேண்டும். மேலும் ئ ، ؤ ، أ இந்த குறியீடுகளையும் ஹம்ஸ் ء என்றே புரிந்து கொள்ளவேண்டும்.

ஆனால் வார்த்தையின் இடையில் அலி:புக்கு மேல் ஹம்ஸ் ء வராமல் ا அலி:ப் மாத்திரம் வந்தால் அதனை ا அலிப் என்பதாகவே புரிந்து கொள்ளவேண்டும்.

اَلْمَدُّ الْعَارِضُ لِلُّسكُوْنِ (اَلْجَائِزُ) (அல் மத்துல் ஆரில் லிஸ்சுக்கூன்)

**இடையில் ஏற்பட்ட சுக்கூனின் மத்து**

மத்துடைய எழுத்திற்குப் பிறகு ஏதாவது ஒரு ஹரக்கத்துள்ள எழுத்து வந்து மூச்சுத்திணறலினாலோ அல்லது நிறுத்தி ஓதும் காரணங்களினாலோ அந்த எழுத்தில் நிறுத்தினால் அந்த எழுத்துக்கு ـٍ பத்ஹத்தைனைத்தவிர வேறு என்ன குறியீடு (ஹரகத்து) இருந்தாலும் சரி அந்த எழுத்துக்கு சுக்கூன் செய்தே நிறுத்த வேண்டும். இதற்கு மத்துல் ஆரில் லிஸ்சுக்கூன் (அதாவது இடையில் வந்த சுக்கூன்) என்று சொல்லப்படும். காரணம் நிறுத்தி ஓதும் போது சுக்கூனும் அதற்கு பின்னால் உள்ள வார்த்தையோடு சேர்த்து ஓதும் போது அதற்குள்ள ஹரக்கத்தையும் ஓதுவதினால், இதனை **இரண்டு அல்லது நான்கு அல்லது ஆறு விரல் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு** நீட்டி ஓதவேண்டும்.

உதாரணம்

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَ

மேற்கூறப்பட்ட உதாரணத்தில் யாஉ சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன்னுள்ள எழுத்தில் மீம் **(م)** கஸர் செய்யப்பட்டு வந்துள்ளது. எனவே இது மத்துடைய எழுத்தாகும். رَبِّ الْعَــالَمِيْنَ (ரப்பில் ஆலமீன) ஆலமீன என்னும் நூனுக்கு பத்ஹு செய்யப்பட்டிருக்கின்றது. ஆனால் இங்கு ஆயத்து (வசனம்) முடிவடைவதால் நாம் நிறுத்தி ரப்பில் ஆலமீன் என்று நூனுக்கு சுக்கூன் செய்து ஓதுகின்றோம். அதற்குப் பின்னால் உள்ள வார்த்தையோடு இதை சேர்த்துப் படிக்கும் போது நூனுக்கு பத்ஹு செய்தே படிப்போம். எனவே இந்த சுக்கூனுக்கு இடையில் வந்த சுக்கூன் என்று சொல்லப்படும். **இதனை இரண்டு அல்லது நான்கு அல்லது ஆறு விரல்கள் நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி** ஓதவேண்டும்.

## اَلْمَدُّاللاَّزِمُ

**அல் மத்துல்லாசிம்**

மத்துடைய எழுத்திற்க்குப்பின் அதே வார்த்தையில் அல்லது அதே எழுத்தில் சேர்த்துப்படிக்கும் போதும் நிறுத்திப்படிக்கும் போதும் சுக்கூன் வருவதற்கு "மத்துல்லாஸிம்" எனப்படும்.

**மத்துல் லாஸிம் நான்கு வகைப்படும்**

1. اَلْمَدُّ اللاَّزِمُ الْكَلِمِي الْمُثَقَّلِ (அல் மத்துல் லாஸிம் கலிமை முதக்கல்)
2. اَلْمَدُّ اللاَّزِمُ الْكَلِمَي الْمُخَفَفِ (அல் மத்துல் லாஸிம் கலிமை முகஃப்பஃப்)
3. اَلْمَدُّ اللاَّزِمُ الْحَرْفَــي الْمُثَقَّلِ (அல் மத்துல் லாஸிம் ஹர்பை முதக்கல்)
4. اَلْمَدُّ اللاَّزِمُ الْحَرْفَــي الْمُخَفَّفِ (அல் மத்துல் லாஸிம் ஹர்பை முகஃப்பஃப்)

## اَلْمَدُّاللاَّزِمُ الْكَلِمَي الْمُثَقَّلِ

அல் மத்துல் லாஸிம் கலிமை முதக்கல்

"மத்துல் லாஸிம் கலிமை முதக்கல்" என்பது, ஒரு வார்த்தையில் மத்துடைய எழுத்து வந்து அதே வார்த்தையில் அதற்குப்பின்னால் (ஷத்து) செய்யப்பட்ட எழுத்து வருவதற்கு சொல்லப்படும். இவ்வாறு வந்தால் அதனை **ஆறு விரலை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி** ஓதவேண்டும்.

உதாரணம்

وَوَجَدَكَ ضَالًّا فَهَدَى

விளக்கம்:

"ளால்லன்" என்ற வார்த்தையில் அலிஃப் சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன் உள்ள எழுத்து பத்ஹ் செய்யப்பட்டிருக்கின்றது. ஆகவே இது மத்துடைய எழுத்தாகும். மத்துடைய எழுத்திற்குப்பிறகு அதே வார்த்தையில் "லாம்" ஷத்து செய்யப்பட்டிருக்கின்றது.

மத்துல்லாஸிம் கலிமை முதக்கல் சட்டத்தின்படி இங்கே ஆறு விரல் அளவு நீட்டி ஓதுவது அவசியமாகும்.

## اَلْمَدُّاللاَّزِمُ الْكَلِمِي الْمُخَفَّفِ

<u>மத்துல் லாஸிம் கலிமை முகஃப்பஃப்</u>

“மத்துல் லாஸிம் கலிமை முகஃப்பஃப்” என்பது, ஒரு வார்த்தையில் மத்துடைய எழுத்து வந்து அதே வார்த்தையில் அதற்குப்பின்னால் சுக்கூன் செய்யப்பட்ட எழுத்து வருவதற்கு சொல்லப்படும். இவ்வாறு வந்தால் அதனை **<u>ஆறு விரலை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி</u>** ஓதவேண்டும்.

<u>உதாரணம்</u>

ءَ الْئـــنَ

<u>விளக்கம்:</u>

“ஆல்ஆன” என்ற வார்த்தையில் அலிஃப் சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன் உள்ள எழுத்து பத்ஹ் செய்யப்பட்டிருக்கின்றது. ஆகவே இது மத்துடைய எழுத்தாகும். மத்துடைய எழுத்திற்குப்பிறகு அதே வார்த்தையில் லாம் சுக்கூன் செய்யப்பட்டிருக்கின்றது. மத்துல்லாஸிம் கலிமை முகஃப்பஃபின் சட்டத்தின்படி இங்கே ஆறு விரல் அளவு நீட்டி ஓதுவது அவசியமாகும்.

## اَلْمَدُّاللاَّزِمُ الْحَرْفِـــي الْمُثَقَّلِ

<u>மத்துல் லாஸிம் ஹர்பை முதக்கல்</u>

“மத்துல் லாஸிம் ஹர்பை முதக்கல்” என்பது, எழுத்து வடிவத்தில் சூராக்களின் ஆரம்பத்தில் வரக்கூடிய எழுத்துக்கள் மூன்றெழுத்துக்களைக்கொண்டுள்ள வடிவத்தில் வந்து அதன் நடு எழுத்து மத்துடைய எழுத்தாக இருந்து அதற்குப்பின் உள்ள எழுத்து (சுக்கூன் செய்யப்பட்டு அந்த சுக்கூன் செய்யப்பட்ட எழுத்து அதற்கு பின் உள்ள எழுத்தோடு) இத்காம் செய்யப்பட்டிருப்பதற்குச் சொல்லப்படும். இவ்வாறு வந்தால் அதனை **<u>ஆறு விரலை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி</u>** ஓதவேண்டும்

<u>உதாரணம்</u>

اَلـــم

விளக்கம்:

“அலிஃப், லாம், மீம்” இதை எழுத்து வடிவத்தில் அரபியில் எழுதும் போது أَلِفْ ، لَامْ، مِيْمْ என்று எழுதுவோம். இங்கே “லாமை” பாருங்கள்! இது லாம், அலிஃப், மீம் என்று மூன்று எழுத்துக்களைக் கொண்டு எழுதப்பட்டிருக்கின்றது. இதனுடைய நடு எழுத்து மத்துடைய எழுத்தாக இருக்கின்றது. அதாவது “அலிஃப்” சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன் உள்ள எழுத்து பத்ஹ் செய்யப்பட்டிருக்கின்றது. இந்த மத்துடைய எழுத்திற்கு பின்னுள்ள எழுத்து “மீம்” சுக்கூன் செய்யப்பட்டிருக்கின்றது. இந்த சூக்கூன் செய்யப்பட்ட “மீம்” அதற்கு பின்னுள்ள மீமோடு இத்காம் செய்யப்பட்டிருக்கின்றது. படிக்கும் போது லாம்மீம் என்று ஷத்து செய்து ஆறு விரல் அளவு நீட்டி ஓத வேண்டும்.

## اَلْمَدُّاللاَّزِمُ الْحَرْفِي الْمُخَفَّف

<u>மத்துல் லாஸிம் ஹர்பை முக:ப்ப:ப்</u>

“மத்துல் லாஸிம் ஹர்பை முக:ப்ப:ப்” என்பது, எழுத்து வடிவத்தில் சூராக்களின் ஆரம்பத்தில் வரக்கூடிய எழுத்துக்கள் மூன்றெழுத்துக்களை கொண்டுள்ள வடிவத்தில் வந்து அதன் நடு எழுத்து மத்துடைய எழுத்தாக இருந்து அதற்குப்பின்னுள்ள எழுத்து (சுக்கூன் செய்யப்பட்டதாக இருந்து அந்த சுக்கூன் செய்யப்பட்ட எழுத்து அதற்கு பின் உள்ள எழுத்தோடு) இத்காம் செய்யப்படாமலிருப்பதற்கு சொல்லப்படும். இவ்வாறு வந்தால் அதனை **<u>ஆறு விரலை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி</u>** ஓதவேண்டும்.

<u>உதாரணம்</u>

ن وَالْقَلَمِ وَمَا يَسْطُرُوْنَ

மத்துல் லாஸிம் ஹர்பை முக:ப்:பபு:க்கு வரக்கூடிய எழுத்துக்கள்.

اَلصَّادُ ، اَلْـــمِيْمُ ، اَلْعَيْنُ ، اَلنُّوْنُ ، اَلْكَافُ ، اَلْقَافُ

விளக்கம்:

நூன், இதை எழுத்து வடிவத்தில் அரபியில் எழுதும் போது نُـــوْنْ என்று எழுதுவோம். இங்கே நடு எழுத்து மத்துடைய எழுத்தாகும். மத்துடைய எழுத்திற்கு பின்னுள்ள எழுத்து ஷத்து செய்யப்படாமல் சுக்கூன் செய்யப்பட்டிருக்கின்றது. இதற்கு மத்துல் லாஸிம் ஹர்பை முக:ப்ப:ப் என்று சொல்லப்படும். இவ்வாறு வந்தால் அதனை **<u>ஆறு விரலை நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி</u>** ஓதவேண்டும். மற்ற உதாரணங்களையும் இவ்வாறே விளங்கிக் கொள்ளவும்.

## சூராவின் ஆரம்பத்தில் எழுத்து வடிவத்தில் வரக்கூடிய மத்துடைய <u>எழுத்துக்களின் சட்டங்கள்</u>

குர்ஆனுடைய சூராவின் ஆரம்பங்களில் வரக்கூடிய எழுத்துக்கள் பதினான்கு. ( ص، ح، ط، ر، ي، ق، ك، م، ع، ا، ل، س، ن، ة ) சுருக்கமாக ( صَحَّ طَرِيْقُكَ مَعَ السُّنَّةِ ) என்று கூறலாம். இவைகள் முன்று வகை.

1- அறவே மத்து செய்யக்கூடாதது. இது ஒரு எழுத்தாகும். ( ا ) அலி:பில் மத்து இல்லை. உதாரணமாக (الــــــم) இங்கு அலி:பை மத்து செய்யாமல் சாதாரணமாக ஓத வேண்டும்.

2- இரண்டு எழுத்தின் வடிவத்தில் எழுதப்பட்டு இரண்டாவது எழுத்து மத்துடைய எழுத்தாக இருப்பது. இவைகள் ஐந்து எழுத்துக்களாகும் ح، ي، ط، هــ، ر சுருக்கமாக (حَـــيٌّ طَـــهُـــرَ) என்று சொல்லலாம். حا ، يا ، طا ، ها ، را என இரண்டு எழுத்தாக

எழுதப்படும். இவைகளை இரண்டு விரல்களை நீட்டக்கூடிய அல்லது மடக்ககூடிய அளவிற்கு நீட்டி ஓத வேண்டும்.

3- மூன்று எழுத்தின் வடிவத்தில் எழுதப்பட்டு நடு எழுத்து மத்துடைய எழுத்தாக இருப்பது. இவைகள் எட்டு எழுத்துக்களாகும் ن، ق، ص، ع، س، ل، ك، م சுருக்கமாக (نَقَصَ عَسَلُكُمْ) என்று சொல்லலாம். ( كاف، نون، قاف، صاد، سين، لام ) (ميم என மூன்று எழுத்தின் வடிவத்தில் எழுதப்படும். இவைகளை ஆறு விரல்களை

நீட்டக்கூடிய அல்லது மடக்கக்கூடிய அளவிற்கு நீட்டி ஓத வேண்டும். ع னை மாத்திரம் நான்கு அல்லது ஆறு விரல் அளவிற்கு நீட்டி ஓதலாம். காரணம் இதன் நடு எழுத்து மத்துடைய எழுத்தாக இல்லை.

## أَحْكَامُ الرَّاءِ

## றாவின் சட்டங்கள்

றாவை வல்லினமாகவும், மெல்லினமாகவும் ஓதலாம்.

## வல்லினமாக ஓதும் இடங்கள் பின்வருமாறு

1- றா பத்ஹு அல்லது லம்மு செய்யப்பட்டிருந்தால் உ-ம் - رُزِقْـنَـا - رَبَّـنَـا

2- றா சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன்னால் உள்ள எழுத்து பத்ஹு அல்லது லம்மு செய்யப்பட்டிருந்தால் உ-ம் فَارْتَـقِبْ وَقُـرْآنًا

3- ஹம்ஸத்துல் வஸ்லுக்குப்பின் சுக்கூன் செய்யப்பட்டதாக றா வந்தால் உ-ம்

اِرْجِعُوْا إِلَى أَبِيْكُمْ – أَمِارْتَابُوْا – لِـمَنِ اِرْتَضَى

4- அடிப்படையான கஸ்றுக்கு அடுத்ததாக றா சுக்கூன் செய்யப்பட்டு றாவுக்கு அடுத்ததாக இஸ்திஃலாவுடைய எழுத்துக்களில் ஒன்று அதே வார்த்தையில் பத்ஹ் அல்லது லம்மு செய்யப்பட்டதாக வந்தால் உ-ம் مِـرْصَادًا – فِرْقَةٍ

இஸ்திஃலாவுடைய எழுத்துக்கள் :- خ ص ض غ ط ق ظ

5- வார்த்தையின் கடைசியில் றா ஹரக்கத்து செய்யப்பட்டுள்ளதாக இருந்து வக்ஃபு செய்வதின் காரணமாக அதற்கு சுக்கூன் செய்தால் அந்த றாவையும் வல்லினமாக ஓத வேண்டும்.

றா பத்ஹு செய்யப்பட்டிருப்பதற்கு உதாரணம்:

(فَعَقَرَ ، يُوَلُّوْنَ الدُّبُرَ ، لَنْ تَبُوْرَ )

றா ளம்மு செய்யப்பட்டிருப்பதற்கு உதாரணம்:

(بَرِقَ الْبَصَرُ ، وَبِئْسَ الْقَرَارُ ، تُرْجَعُ الأُمُوْرُ )

றா கஸ்று செய்யப்பட்டிருப்பதற்கு உதாரணம்:

( كَلَمْحٍ بِالْبَصَرِ ، وَتَوَاصَوْا بِالصَّبْرِ ، بِالنُّذُرِ )

## <u>மெல்லினமாக ஓதும் இடங்கள்</u>

1- றா கஸ்று செய்யப்பட்டிருந்தால் உ-ம் فَرِحَ الْــمُخَلَّفُوْنَ – فَرِهَانٌ – رِدْءًا

2- றா சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன்னால் உள்ள எழுத்து கஸ்று செய்யப்பட்டிருந்தால் உ - ம் شِرْعَةً ، مِرْيَةَ ، فِرْعَوْنَ ، اِسْتَغْفِرْ لَهُمْ ،

3- வக்ஃபின் காரணமாக றா சுக்கூன் செய்யப்பட்டு அதற்கு முன்னால் சுக்கூன் செய்யப்பட்ட யா வந்தால் உ-ம் خَـــبِـــيْــــرٌ – خَيْرٌ

4- அடிப்படையான கஸ்றை அடுத்து றா சுக்கூன் செய்யப்பட்டு அதையடுத்து ஃபத்ஹ் அல்லது லம்மு செய்யப்பட்ட இஸ்திஃலாவுடைய எழுத்து வரவில்லையானால் உ-ம் وَفِرْعَوْنَ شِرْذِمَةٌ

5- றாவுக்கு பின்னால் சாய்த்துப்படிக்கும் அலிஃப் வந்தால் உ-ம் مَـــجْـــرَيْهَا

اَلْــقَـــلْــقَـــلَـــة

## <u>அல் கல்கலா</u>

கல்கலாவின் எழுத்துக்கள் ஐந்து ق ط ب ج د சுருக்கமாக சொல்வதாக இருந்தால் قُطْبُ جَـــدٌّ என்று சொல்லலாம். கல்கலா என்பது மேலே சொல்லப்பட்ட எழுத்துக்களில் ஒன்று சுக்கூன் செய்யப்பட்டு வந்தால் அந்த எழுத்துக்கள் வெளியாகும் இடத்தை அழுத்திப் படிக்க வெண்டும். கல்கலாவின் எழுத்து ஒரு வார்த்தையின் கடைசியில் சுக்கூன் செய்யப்பட்ட நிலையில் வந்து அங்கே நிறுத்தினால் மிகவும் அழுத்தி கல்கலா செய்து நிறுத்த வேண்டும்.

<u>உதாரணம்</u>

قُلْ أَعُوْذُ بِرَبِّ الْفَلَقِ - ق

وَاللهُ مِنْ وَرَائِهِمْ مُـــحِيْطٌ - ط

وَمِنْ شَرِّ غَاسِقٍ إِذَا وَقَبَ - ب

وَالسَّمَاءِ ذَاتِ الْبُرُوْجِ - ج

لَـــمْ يَلِدْ وَلَمْ يُوْلَـــدْ - د

**கல்கலாவின் எழுத்துக்களில் ஒன்று வார்த்தையின் மத்தியில் சுக்கூன் செய்யப்பட்டு வந்தால் மிகவும் அழுத்தாமல் இலேசாக அழுத்தி கல்கலா செய்து ஓத வேண்டும்.**

உதாரணம்

إِقْرَأْ بِاسْمِ رَبِّكَ -ق

الَّذِيْ أَطْعَمَهُمْ مِنْ جُوْعٍ - ط

وَالْعَادِيَاتِ ضَبْحًا – ب

إِنَّ إِلَى رَبِّكَ الرُّجْعَى - ج

وَمَا أَدْرَاكَ مَاهِيَهْ - د

## اَلْوَقْفُ

## வக்ஃப் (நிறுத்துதல்)

வக்ஃப் என்பது : “குர்ஆனை மீண்டும் ஓத வேண்டும் என்ற நோக்கத்தில்” மூச்சை இழுப்பதற்காக கொஞ்ச நேரம் ஒரு வார்த்தையின் கடைசியில் சத்தத்தை நிறுத்துவதற்குச் சொல்லப்படும்.

### வக்ஃபின் வகைகள்

1- وَقْفٌ إِنْتِظَارِيٌّ (வக்ஃபுன் இன்திளாரி)

வக்ஃபுன் இன்திளாரி என்பது, பிரபல்யமான பத்து வகையான கிராஅத்துக்களில் பல கிராஅத்துக்களை ஒன்றாகச் சேர்த்து ஓதுவதற்காக நிறுத்துவதற்கு சொல்லப்படும்.

## 2- وَقْفٌ إِخْتِبَارِيٌّ (வக்ஃபுன் இக்திபாரி)

வக்ஃபுன் இக்திபாரி என்பது, ஆசிரியர் கேள்வி கேட்பதினால் அல்லது ஆசிரியரிடத்தில் குர்ஆனை படிக்கக்கூடிய நேரத்தில் ஏற்படும் வக்ஃப்.

## 3- وَقْفٌ إِضْطِرَارِيٌّ (வக்ஃபுன் இள்திராரி)

வக்ஃபுன் இள்திராரி என்பது, மூச்சுத்திணறலினால் அல்லது தும்மலினால் அல்லது மறதியினால் அல்லது இது போன்ற வேறு காரணங்களினால் ஏற்படும் வக்ஃப். எந்த இடத்திலும் இப்படிப்பட்ட வக்ஃப செய்யலாம். இப்படிப்பட்ட வக்ஃப் செய்யும் போது கருத்து பரிபூரணமாக இருந்தால் அதற்கு பின்னுள்ள வார்த்தையில் இருந்து ஆரம்பிக்கலாம். கருத்து பரிபூரணமாகாமல் இருந்தால் விடுபட்ட வார்த்தையில் இருந்தே ஆரம்பிக்க வேண்டும்.

## 4- وَقْفٌ إِخْتِيَارِيٌّ (வக்ஃபுன் இக்தியாரி)

வக்ஃபுன் இக்தியாரி என்பது, குர்ஆனை ஓதக்கூடியவர் மூச்சுத்திணறலினாலோ அல்லது அது போன்ற வேறு எந்தக் காரணங்களினாலோ வக்ஃபு செய்யாமல் அவரின் விருப்பத்தோடு வக்ஃபு செய்வதற்கு சொல்லப்படும். இந்த வகையைப்பற்றித்தான் இங்கு நாம் பேசப் போகின்றோம்.

## வக்ஃபுன் இக்தியாரி ஐந்து வகைப்படும்

1- اَلْوَقْفُ اللاَّزِمُ அல் வக்ஃபுல் லாசிம் (அவசியமான வக்ஃபு)

பின்னால் உள்ள வார்த்தையுடனோ கருத்துடனோ முன்னால் உள்ள வார்த்தைக்கு எத்தொடர்பும் இல்லாமல் இருப்பது. அப்படி பின்னால் உள்ள வார்த்தையோடு சேர்த்துப் படித்தால் தவறான கருத்து விளங்கப்படும் என்றிருந்தால் இதற்கு வக்ஃபுல் லாசிம் என்று சொல்லப்படும். இங்கே வக்ஃபு செய்து படிப்பது அவசியமாகும். இந்த வகை வக்ஃப

விளங்குவதற்காக குர்ஆனில் இவ்வாறு சிறிய மீம் ஒன்று (مـــ) அடையாளமிடப்பட்டிருக்கும்.

### உதாரணம்

(إِنَّمَا يَسْتَجِيْبُ الَّذِيْنَ يَسْمَعُوْنَ مـ وَالْمَوْتٰى يَبْعَثُهُمُ اللّٰهُ ثُمَّ إِلَيْهِ يُرْجَعُوْنَ)

இந்த ஆயத்தில் يَسْمَعُوْنَ என்னும் வார்த்தையில் சிறிய மீம் இருக்கின்றது, இது மத்துல் லாஸிமை காட்டுவதற்காக இடப்பட்ட அடையாளமாகும். இங்கே மூச்சை, பரிபூரணமாக நிறுத்தி வக்ஃபு செய்வது அவசியமாகும். பின்பு وَالْمَوْتٰى يَبْعَثُهُمُ اللّٰهُ என்னும் வார்த்தையிலிருந்து புதிதாக ஆரம்பித்து ஓத வேண்டும்.

2- اَلْوَقْفُ التَّامُّ அல்வக்ஃபுத்தாம் (பரிபூரணமான வக்ஃப்)

எந்த இடத்தில் நிறுத்தினால் கருத்து பரிபூரணமாகுமோ அவ்விடத்தில் நிறுத்துவதற்கு வக்ஃபுத்தாம் என்று சொல்லப்படும். அதாவது அதற்கு பின்னுள்ள வார்த்தையுடனோ அல்லது கருத்துடனோ சேர்த்துப் படிக்க வேண்டுமென்ற அவசியம் எதுவும் இல்லாமலிருப்பது. அப்படி சேர்த்துப் படித்தாலும் பெரும்பாலும் கருத்தில் எந்த மாற்றமும் ஏற்படாது. இந்த வக்ஃபு பெரும்பாலும் ஆயத்தின் முடிவில் அல்லது சரித்திரம் முடிவுறும் போது வரும்.

ஆயத்தின் முடிவிற்கு உதாரணம்

(مٰلِكِ يَوْمِ الدِّيْن)  இங்கே நிறுத்துவது பரிபூரண வக்ஃபாகும்.

சரித்திர முடிவிற்கு உதாரணம்

(أُوْلٰئِكَ عَلٰى هُدًى مِّنْ رَّبِّهِمْ وَأُوْلٰئِكَ هُمُ الْمُفْلِحُوْنَ)  இங்கே الْمُفْلِحُوْنَ என்னுமிடத்தில் வக்ஃபு செய்வது பரிபூரண வக்ஃபாகும். இந்த வகை வக்ஃப விளங்குவதற்காக குர்ஆனில் இவ்வாறு (ط) (قلى) அடையாளமிடப்பட்டிருக்கும்.

3- اَلْوَقْفُ الْكَافِي அல்வக்ஃபுல் காஃபி (போதுமான வக்ஃபு)

ஒரு இடத்தில் நிறுத்துவதினால் கருத்து பரிபூரணமடைகின்றது, ஆனால் வக்ஃபு செய்யப்பட்ட வார்த்தைகளின் கருத்து பின்னுள்ள வார்த்தைகளின் கருத்துக்களோடு சம்மந்தப்பட்டிருக்கும். (அதாவது முன்னுள்ள வார்த்தையின் கருத்தையும் பின்னுள்ள வார்த்தையின் கருத்தையும் சேர்த்து படித்தால் விளக்கம் அதிகம் கிடைக்கும்) ஆனால் பின்னுள்ள வார்த்தையோடு முன்னுள்ள வார்த்தையை சேர்க்க வேண்டுமென்ற அவசியமிருக்காது. இதற்கு வக்ஃபுல் காஃபி என்று சொல்லப்படும்.

உதாரணம்

( فِيْ قُلُوْبِهِمْ مَرَضٌ فَزَادَهُمُ اللّٰهُ مَرَضًاصلي وَلَهُمْ عَذَابٌ أَلِيْمٌ بِمَا كَانُوْا يَكْذِبُوْنَ

)

فَزَادَهُمُ اللّٰهُ مَرَضًا என்னும் வார்த்தையில் வக்ஃப் செய்வது போதுமானது. ஆனால் இதற்கு பின்னுள்ள بِمَا كَانُوْا يَكْذِبُوْنَ என்னுமிடத்தில் வக்ஃபு செய்வது முந்திய வார்த்தையில் வக்ஃபு செய்வதைவிட மிகவும் சிறந்தது. காரணம் பின்னுள்ள வார்த்தையைச் சேர்த்துப் படிக்கும் போதுதான் இதனுடைய பரிபூரணமான கருத்து விளங்கும். இவ்வறே மற்ற ஆயத்துக்களையும் விளங்கிக் கொள்ளுங்கள். இந்த வகை வக்ஃப விளங்குவதற்காக குர்ஆனில் இவ்வாறு (ج) (صلى) அடையாளமிடப்பட்டிருக்கும்.

4-اَلْوَقْفُ الْحَسَنُ அல்வக்ஃபுல் ஹஸன் (அழகான வக்ஃப்)

ஓர் இடத்தில் நிறுத்துவதினால் கருத்து பரிபூரணமடைகின்றது, ஆனால் பின்னுள்ள வார்த்தையோடும் கருத்தோடும் இவ்வார்த்தைக்குத் தொடர்பிருக்கும். இதற்கு வக்ஃபுல் ஹஸன் என்று சொல்லப்படும்.

உதாரணம்

(وَإِنْ يَمْسَسْكَ اللّٰهُ بِضُرٍّ فَلَا كَاشِفَ لَهُ إِلَّا هُوَ صلى وَإِنْ يَمْسَسْكَ بِخَيْرٍ فَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٍ )

هُوَ என்னும் இடத்தில் வக்ஃபு செய்வது வக்ஃபுல் ஹஸனாகும். ஆனால் பின்னுள்ள வார்த்தையோடு சேர்த்துப் படிப்பது நிறுத்திப் படிப்பதை விட மிகவும் நல்லது. காரணம் பின்னுள்ள வார்த்தையை சேர்த்து படிக்கும் போதுதான் இதனுடைய பரிபூரணமான கருத்து விளங்கும். இந்த வகை வக்ஃப விளங்குவதற்காக குர்ஆனில் இவ்வாறு (صلى) (ص) அடையாளமிடப்பட்டிருக்கும்.

5-اَلْوَقْفُ الْقَبِيْحُ அல் வக்ஃபுல் கபீஹ் (மோசமான வக்ஃப்)

எந்த வார்த்தையில் நிறுத்தினால் கருத்து பரிபூரணமாகாதோ அல்லது எந்த வார்த்தையில் நிறுத்தினால் தவறான கருத்து விளங்கப்படுமோ அங்கே நிறுத்துவது வக்ஃபுல் கபீஹாகும்.

<u>உதாரணம்</u>

اَلْحَمْدُ لِلّٰهِ

اَلْحَمْدُ என்னுமிடத்தில் நிறுத்துவது வக்ஃபுல் கபீஹாகும். இங்கே நிறுத்துவதினால் கருத்து பரிபூரணமாகாது.

<u>தவறான கருத்து விளங்கப்படுவதற்கு உதாரணம்</u>

( لَقَدْ سَمِعَ اللهُ قَوْلَ الَّذِيْنَ قَالُوْا إِنَّ اللهَ فَقِيْرٌ ۘ وَنَحْنُ أَغْنِيَاءُ )

فَقِيْرٌ என்னுமிடத்தில் நிறுத்துவது தவறான கருத்தை கொண்டு வரும். ஆகவே இங்கே நிறுத்துவது வக்ஃபுல் கபீஹாகும். இந்த வகை வக்ஃப விளங்குவதற்காக குர்ஆனில் இவ்வாறு (ۘ) அடையாளமிடப்பட்டிருக்கும்.

குறிப்பு:

(∴) இவ்வாறு மூன்று புள்ளிகளுள்ள அடையாளம் குர்ஆனில் தொடர்ந்து இரண்டு இடங்களில் வந்தால் ஓர் இடத்தில் நிறுத்துவது அவசியமாகும். ஓர் இடத்தில் நிறுத்தினால் மறு இடத்தில் நிறுத்தக்கூடாது.

<u>உதாரணம்</u>

( ذٰلِكَ الْكِتَابُ لَا رَيْبَ ۛ فِيْهِ ۛ )

(لَا رَيْبَ) என்னுமிடத்தில் நிறுத்தினால் (فِيْهِ) என்னுமிடத்தில் நிறுத்தக்கூடாது. இவ்வாறே மற்ற ஆயத்துக்களையும் விளங்கிக் கொள்ளுங்கள்.

# مَخَارِجُ الْحُرُوْفِ

<u>ஒவ்வொரு எழுத்துக்களும் வாயிலிருந்து வெளியாகும் இடங்கள்</u>

ا=ء இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சோக்கக்கூடாது. நாவை உயர்த்தவும்கூடாது. குரல் அடித்தொண்டையிலிருந்து மெல்லியதாக ஒலிக்க வேண்டும்.

ب இரு உதடுகளையும் சேர்க்க வேண்டும். பற்களைச் சேர்க்கக்கூடாது. நாவை மேலே உயர்த்தவும் கூடாது குரல் அழுத்தமாக வெளிப்பட வேண்டும்.

ت இரு உதடுகளையம் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் நுனிப்பகுதியை மேல் முன் பற்களிலும் அவற்றின் ஈறிலும் இலேசாக அழுத்த வேண்டும். குரல் நடுத்தரமாக ஒலிக்க வேண்டும்.

ث இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, இரு பற்களையும் சேர்க்கக்கூடாது. நுனிநாக்கு மேற்பல்லைத் தொட்டும் தொடாமலும் இருக்க வேண்டும். நுனி நாக்கு பல்லை விட்டும் சற்று வெளியே வரவேண்டும். குரல் மெல்லியதாக ஒலிக்க வேண்டும்.

ج இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் மத்திய பகுதி மேல் வாயை அழுத்தமாகத் தொட வேண்டும். குரல் அழுத்தமாக இருக்க வேண்டும்.

ح இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, இரு பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் கடைசிப்பகுதி மட்டும் சற்று மேலே உயர்ந்திருக்க வேண்டும். குரல் நடுத்தொண்டையிலிருந்து அழுத்தமாக ஒலிக்க வேண்டும்.

خ இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, இரு பற்களையும் சேர்க்கக்கூடாது. நாக்கின் இறுதிப் பகுதியை மட்டும் சற்று உயர்த்த வேண்டும். குரலை இலேசான காறலின் போதுள்ள கரகரப்புடன் வெளிப்படுத்த வேண்டும்.

د இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாக்கின் நுனிப்பகுதி முன் மேற்பற்களை அழுத்தமாகத் தொட வேண்டும். குரல் வல்லோசையுடன் (வல்லினமாக) ஒலிக்க வேண்டும்.

ذ இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, இரு பற்களையும் சேர்க்கக்கூடாது. நுனி நாக்கு முன் மேற்பற்களின் வலது ஓரத்தை மிக இலேசாகத் தொட்டிட வேண்டும். குரல் சற்று மெல்லியதாக இருக்க வேண்டும்.

ر இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் வலது ஓரம் முழுவதும் கடைவாய்ப் பற்களின் ஈறை இலேசாகத் தொட வேண்டும். குரல் சுழலோசையுடன் வெளிப்பட வேண்டும்.

ز இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, இரு பற்களையும் சேர்க்கக்கூடாது. நுனி நாக்கு முன் மேற்பற்களின் நடுவில் இருக்க வேண்டும். குரல் அழுத்தமாக ஒலிக்க வேண்டும். குரல் விசில் ஓசையுடன் ஒலிக்க வெண்டும்.

س இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாக்கைச் சற்று வளைத்து நாக்கின் இரு ஓரங்களையும் மேல் கடைவாய்ப் பற்களோடு உரசி உச்சரிக்க வேண்டும். குரல் மெல்லியதாக இருக்க வேண்டும்.

ش இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நுனிநாக்கை மேற்புறமாக சற்று மடக்கி வாயின் முகட்டின் பக்கமாக நெருக்கி வைத்துக் கொள்ள வேண்டும். காற்றை உள்ளிலிருந்து அழுத்தமாக பரவலாக வெளியிட வேண்டும்.

ص இவ்வெழுத்தை உச்சரிக்கும் போது இரு உதடுகளையும் பற்களையும் சேர்க்கக்கூடாது, நாவின் இடது, வலது பக்கத்தை வளைத்து, இரு புறமும் மேல் கடைவாய்ப் பற்களை அழுத்தமாகத் தொட வேண்டும். குரல் வாய் நிரம்ப ஒலிக்க வேண்டும்.

ض இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, இரு பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் வலது பகுதியைக் கொண்டு மேல் கடைவாய்ப் பற்களின் ஈறை இலேசாகத் தொட வேண்டும். குரல் மிக அழுத்தமாக இருக்க வேண்டும். வாய் நிரம்ப ஒலிக்க வேண்டும்.

ط இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, இரு பற்களையும் சேர்க்கக்கூடாது.

ظ இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாக்கின் இறுதிப்பகுதியை உள்வாயின் பின்பகுதியை தொடாத வண்ணம் சற்றே உயர்த்த வேண்டும். குரலை முன் தொண்டையிலிருந்து கரகரப்பு இல்லாமல் அழுத்தமாக வெளிப்படுத்த வேண்டும்.

ع இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, இரு பற்களையம் சேர்க்கக்கூடாது, நாவின் கடைசிப்பகுதி மட்டும் சற்று மேலே உயர்ந்திருக்க வேண்டும். குரல் நடுத் தொண்டையிலிருந்து அழுத்தமாக ஒலிக்க வேண்டும்.

غ இரு உதடுகளும் சேராமல் - ஆனால் நெருக்கமாக இருக்க வேண்டும். நுனிநாக்கு முன் மேற்பற்களை இலேசாகத் தொட வேண்டும். நாக்கின் நடுப்பகுதியைச் சற்று மேலே உயர்த்த வேண்டும். குரல் சற்றுத் தூக்கலாக இருக்க வேண்டும்.

ف இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, முன் பற்கள் கீழ் உதட்டின் ஈரமான பகுதியை இலேசாகத் தொட்டுக் கொண்டிருக்க வேண்டும். நாவு எழாமல் இருக்க வேண்டும். குரல் மிக மெல்லியதாக வெளிப்பட வேண்டும்.

ق இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் கடைசிப் பகுதியைக் கொண்டு உள்வாயின் மேற்பகுதியைச் சற்று அழுத்த வேண்டும். குரல் வாய் நிரம்ப ஒலிக்க வேண்டும்.

ك இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் பிற்பகுதி மேல்வாயைத் தொட்டிருக்க வேண்டும். குரல் மிக மெல்லியதாக இருக்க வேண்டும்.

ل இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாக்கின் நுனிப்பகுதி முன் மேற்பற்களின் ஈறைச் சற்றுப் பின்னால் தொட வேண்டும்.

م இந்த எழுத்தை உச்சரிக்கும்போது இரு உதடுகளையும் சேர்க்க வேண்டும். பற்களைச் சேர்க்கக்கூடாது, நாவை மேலே உயர்த்தவும்கூடாது. குரல் மெல்லியதாக இருக்க வேண்டும்.

ن இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது, நாக்கின் நுனிப்பகுதி முன் மேற்பற்களின் ஈறின் ஆரம்பப்பகுதியை இலேசாகத் தொடவேண்டும். குரல் மூக்கிலிருந்து வரவேண்டும்.

ـــهـ இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவை மேலே உயர்த்தவும் கூடாது. குரல் அடித்தொண்டையிலிருந்து மெல்லியதாக ஒலிக்க வேண்டும், அழுத்தமாக ஒலிக்கக்கூடாது.

و உதடுகளின் இரண்டு ஓரங்களையும் சேர்த்து வைக்ககவும், மத்தியில் சற்று இடைவெளி இருக்க வேண்டும். பற்களைச் சேர்க்கக்கூடாது. நாவு எழாமல் இருக்க வேண்டும். குரல் மெல்லியதாக இருக்க வேண்டும்.

ي இரு உதடுகளையும் சேர்க்கக்கூடாது, பற்களையும் சேர்க்கக்கூடாது. நாவின் நடுப்பகுதி மேல்வாயைத் தொட்டும் தொடாமலும் இருக்க வேண்டும். குரல் நடுத்தரமாக இருக்க வேண்டும். நாவைக் கொண்டு முன் மேற்பற்களின் ஈறை நன்கு அழுத்த வேண்டும்.